உ

சிவமயம்.

# விருதுநகர், ஸ்ரீமத் வன்னியானந்தலிங்கப் பதிகமும், ஸ்ரீவேல்முருக ஐங்கர விநாயகர்-பதிகமும்.

இஃது

கோவில்பட்டி, மகா-ா-ா-ஸ்ரீ

க. ச. சுந்தரம்பிள்ளையவர்கள்

குமாரர்

சங்கீத சாகித்திய வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ

ஸ்ரீநிவாஸக் கவிராயரவர்கள்

இயற்றியது.

விருதுநகர், மகா-ா-ா-ஸ்ரீ

வே. வ. சண்முக நாடார் அவர்கள்

பொருளுதவியால்

விருதுநகர், ஸ்ரீமான்

இ... லிங்கக் குருக்களவர்களது

... அச்சியந்திரசாலையிற்

...ப்பெற்றது.

...28.

உ

சிவமயம்.

விருதுநகர், ஸ்ரீமத்

# வன்னியானந்தலிங்கப் பதிகமும், ஸ்ரீவேல்முருக ஐங்கர விநாயகர்-பதிகமும்.

இஃது

கோவில்பட்டி, மகா-ள-ள-ஸ்ரீ
க. ச. சுந்தரம்பிள்ளையவர்கள்
குமாரர்
சங்கீத சாகித்திய வித்வான் மகா-ள-ள-ஸ்ரீ
ஸ்ரீநிவாஸக் கவிராயரவர்கள்

இயற்றியது.

விருதுநகர், மகா-ள-ள-ஸ்ரீ
வே. வ. சண்முக நாடார் அவர்கள்
பொருளுதவியால்
விருதுநகர், ஸ்ரீமான்
இராமலிங்கக் குருக்களவர்களது
சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.
1928.

# சாற்றுக்கவிகள்.

## கெற்பலிங்கம்பட்டி, ஸ்ரீமான்
## குருவாரெட்டியாரவர்களியற்றியது.

செந்திரு விளங்குதிரு விருதைமா நகரின்மிசை
திகழரய மரபினி லுயர்
சித்தசாந் தத்திலக மாயடிய ரோடுதவ
சிவ ஞானியர்க்கு முதவும்
பந்தமறு வன்னியானந்த லிங்கேசர் மேல்
பாவாணர் சித்த மகிழ
பக்திஞானஞ் செல்வ மும்பெருகவே நல்ல
பதிக மினிதா யிசைத்தும்
சிந்தூர விளங்குழவி போல்வதன நாதன்மேல்
செந்தமிழ்க் கவி யிசைத்தும்
சேடனு லும்புகழ முடிவுறாக் கீர்த்தியைச்
செகதலந் தனி லடைந்தான்
அந்தமிகு பூவசிய காரள குலதிலக
மாய்நின்ற ஸ்ரீநி வாச
னென்ற வித்துவான் புவிராசரும் புகழு
மழகொளுகு கவிஞ ரேறே.

## விருதுநகர், சங்கீதசாகித்ய வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ
## அ. கந்தசாமிக் கவிராயரவர்களா லியற்றியது.

தருமங்கள் திகழ்கின்ற விருதையம்பதி தமிழ்
க்ஷத்திரிய குல திலகமாம்

சண்முகம் அன்புபுரி தந்தைசெய் தருளுநகந்
தனவனந் தனிலமர்ந்ததி
யருள்தங்கு வேன்முருக வைங்கர விநாயக
னடியிணையின் மீது மென்றும்
அமரர்துதி வன்னியா னந்த லிங்கேசுர
னடியிணையின் மீது மினிய
பொருள்தங்கு மிந்தவிரு பதிகமதையிலகுமெழிற்
பொன்மாலை யெனச்சூட்டி நற்
புகழது படைத்ததிக பேரின்ப மெய்தினன்
பூம்பொழின் மலர்த் தடஞ்சூழ்
திருமங்கை நகரிலுறை சைவநெறி தவறாத
செய்ய சுந்தரமெனு முகில்
செய்தவத்தால் வந்த துய்யமிக்கோ னெங்கள்
சீனி வாசக் குரிசிலே.

## விருதுநகர், ஸ்ரீமான்
## இராமலிங்கக் குருக்களவர்களியற்றியது.

எத்தினமும் முத்துமுடி வேந்தரொடு தேவர்களு
மிஞ்ஞிறைசி யேத்திப்
பத்திசெயும்வேன்முருக வைங்கரற்குமெப்பவுசும்
பண்பாய் நல்கிச்
சித்திதரும் வன்னியா னந்தருக்கும் பதிகமது
செப்பி னானல்
முத்தமிழ்தேர்மங்கைநகர்ச் சீனிவாசப்பெயர்கொள்
முதியோன் மாதோ.

உ

சிவமயம்.



விருதுநகர்,

வே. வ. சண்முக நாடாரவர்கள்

நந்தனவனத்தின்கண்விளங்கும்வேல்முருகவைங்கர

# விநாயகர் பேரிற்பதிகம்.

வெண்பா.

சேல்பாவுந் தண்கழனி தெங்குவளர் சோலைதிகழ்
வேல்முருக வைங்கர விநாயகன்மேல்—சீலமுடன்
நற்பதிகஞ் செப்புதற்கு ஞானகய மாமுகனே
சிற்பரனே நல்லருணீ செய்.

ஐயனேகருணை மெய்யனேயடிய
ரஞ்சலித் திருகரங் கூப்பும்
துய்யனே ஞானச் சுடரொளி விளக்கே
சொல்லொணு மதகரிவதனு
வையமீதுன்னை யன்றியான் துதியேன்
வண்மையாச் சண்முகன் பணியுஞ்
செய்யவேல் முருக வைங்கரா வெனது
தீவினைதீர்த்திட வருளே. (1)

ஆதரித் தெனது சஞ்சலந் தவிர்த்துன்
னருட்பெருங் கருணையைநிரப்பி
பூதலத் திருத்தி யாட்கொள்வ தென்றோ
புண்ணிய முக்கணாவடியேன்
பாதலத் துறையும் பணியணை மருகா
பண்புடன் சண்முகன்பணியும்
மீதலத் துறுவேல் முருக னைங்கரனே
வினையதுதீர்த் தருள்புரியே. (2).

பையரா வணிந்த பரனருள் புதல்வா
பண்டுயான் புரிந்திடும் பவங்கள்
கையுறா வண்ணங் கடைக்கணித் தருளுங்
கண்கள் மூன்றுடையதோர் முதல்வா
மையுறு குழலார் மயலது தவிர்ப்பாய்
வாரணா சண்முகன் பணியும்
மெய்யுறு வடிவேல் முருக னைங்கரனே
வினையது தீர்த் தருள்புரியே. (3)

மலைமகள் புதல்வா வல்லபை கணவா
வஞ்சகர் பாலணுகா
நிலையுறு முதல்வா நித்திய வரதா
நீணில முதலுளோர் போற்றுங்
கலைவளர் நிபுணா கற்பகக் கொழுந்தே
கருணையாச் சண்முகன் பணியுங்

தொலைவில் வேல்முருக வைங்கரா வெனது
துயர் தவிர்த் தாதரித்தருளே. (4)

அத்தனே முன்னோர் கனிதனக் காழி
யுலகமே யரன்வடி வென்று
சித்தமீ துற்று வலமது புரிந்த
திகழ்மருப் புறுகரி வதனா
சுத்தனே ஞான தூயமா மணியே
சுந்தரா சண்முகன் பணியும்
நித்தனே வடிவேல் முருக வைங்கரனே
நீயெனக் கருள்புரிந் தாளே. (5)

சென்ன வாரிதியிற் படிந்தலைந் துழலுந்
தீவினை வசமுறு வண்ணம்
மன்னனகு கருணைக் கரமதி லெடுத்து
மகிழ்வுட னுனவ னென்றே
தனதிமி தகுண வெனநடம் புரிவோன்
றனயனே சண்முகன் பணியுங்
கனகமா வடிவேல் முருக வைங்கரனே
கவலைதீர்க் காதரித் தருளே. (6)

பஞ்சவர்க் கருளும் பச்சைமால் மருகா
பத்தர்க ளிருதய மகலாக்
குஞ்சர முகனே குருநவ மணியே
கோதிலாத் தனிப்பெரு முதலே

செஞ்சிலம் பசையுங் கஞ்சமா மலர்த்தாள்
தினந்தினஞ் சண்முகன் பணியுந்
தஞ்சவேல் முருக வைங்கரா வெனது
சஞ்சலந் தவிர்த்திட வருளே. (7)

பத்திரன் னெறியின் பாலணுகாத
பண்பிலாக் கயவர்பா லணுகி
நத்தியே குறையை நவில்வதை யொழித்து
நலந்தரு கருணையை யுதவு
மத்திமா முகனை மண்ணவே மகிழ்ந்தே
யன்புடன் சண்முகன் பணியுஞ்
சத்திவேல் முருக வைங்கரா கிருபை
தந்தெனை யாதரித் தருளே. (8)

மும்மதக் களிறே முத்தமிழ்க் கிறையே
முப்புர மெரிசெய்த தாதை
செம்மையின் ரதத்தி னச்சது முரித்த
தேசிகா திருவடிப் பதுமம்
இம்மையே வேண்டு மெளியனுக் கிரங்கி
யின்பொடு சண்முகன் பணியும்
நம்மைவேல் முருக வைங்கரா கருணை
நல்கியே யாதரித் தருளே. (9)

ஆரணந் துதிக்கும் வாரணா போற்றி
யன்புடன் செகதல மளந்த

நாரணன் மருகா நாதனே போற்றி
நலந்திகழ் தெரிசனச் சேவை
பூரணமாகத் தந்தெனை யாளும்
புண்ணியா சண்முகன் பணியுங்
சாரணவடிவேல் முருக வைங்கரனே
கருணையோ டாதரித் தருளே. (10

வெண்பா

சீரார் திருமகவுஞ் செல்வமொடு நற்புகழும்
பேராரு மின்பம் பெருகுமே—ஏராரும்
வேல்முருக வைங்கர விநாயகன்ற னற்பதிகம்
ஞாலமதிலே படித்தால் நன்கு.



உ

சிவமயம்.



# வன்னியானந்த லிங்கப் பதிகம்.

## விநாயகர் வணக்கம்.

நண்ணரிய வன்னியா னந்தலிங்கர் நற்பதிகம்.
பண்ணிசையின் பாவாலே பாடுதற்கு—வண்ணமுறு
மைங்கரமா வேழமுகத் தண்ணலே யற்புதஞ்சேர்
நங்குருவாய் வந்தருளே நல்கு.

## நூல்.

செங்கமல மாமாது தங்கியொளிர் சோலையின்
தேசுவள்ர் சோதி வடிவாய்த்
தினகர மணிக்கிரண சிகரமோ டமைத்திடுஞ்
சித்ர மணி மண்டபத்தில்
பொங்கமொடு தங்கிமிக நன்கடிய ரன்பினொடு
பொன்கழல் துதிக்கு முதல்வா
புண்ணியா புவனமகிழ் கண்ணியா நலமது
புரிந்திலகு நாத கீத

அங்கமே யமரர்ப்பணி துங்கமே மெஞ்ஞான
வாதியே யனாதியான
வகிலமதில் வந்துனது காட்சியின் சேவையை
யானந்த பூர்த்தியாகி
யிங்கிதநலம் பெருக விங்கினி தளித்தருளு
மேகாந்த முத்தி முதலே
யீசனே வன்னியா னந்தலிங் கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (1)

விண்ணுலக முதலாதி மண்ணுலக ரண்மியர
விந்தமலர் நற்றாளிணை
வியந்துபனி மலர்கொடு நயந்துமிக வர்ச்சிக்கும்
வேதாந்த முத்தி முதலே
பண்ணினிய தண்ணிசைகள் மன்னியதி லின்புற
பண்பினொடு நினது புகழை
பகரரிய பாகினி ரசந்தினிது மிக்கவே
பாவி முத்தமிழை யுதவ
வண்ணலே யரவமணி வண்ணனே நினதுதிரு
வரமருள்வ தெது சமையமோ
அகிலமதி லுனையன்றி வேறியார் துணையெனக்
கறியும் வகை யானறிகிலேன்
எண்ணரிய வல்வினைகள் நண்ணியணு காமலே
யேழை யின் குணமறிந்தே

யீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (2)

அரியயன் தேடியுங் காணாத வையனே
யன்பினொடு வன்ப ரிதய
வங்கமல மீதுநின் றகலாது குடிகொண்ட
அருட்பெருங் கருணை வெள்ளம்
பரிவுட னளித்திடும் பரம கருணாகரா
பண்ணவர் தொழுந் தேசிகா
பண்டவவினைக்கணுறு தொண்டனைக்கிருபையொடு
பாலிப்ப தெந்த நாளோ
கரிகளுறு மட்ட திசை ககனமுங் காக்கின்ற
கருணையின் திற மில்லையா
கண்டினிய மொழிகளுறு மலைமகள் மயக்கமோ
கசடனே னென் றறிகிலேன்
எரியுறு புரங்கெடக் கணமதி லெரித்தவா
யெங்கு நிறைகின்ற பொருளே
யீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (3)

திருவுறையு மாதவன் றங்கையின் லோலனே
செகதல மனைத் தினுக்குந்
தேவாதி தேவனே தில்லை நடராஜனே
தேசிகா நினது புகழை

யரிவரிய சேடனாற் சொல்லுதற் கெட்டாவெ
னற்ப வோர் நாவினாலே
யளவிடற் கெளியதோ திருவுளக் குணமதை
யணுவு மறியாத வேளே
கருவுறையு மதைவென்று வருபிறவி மாற்றிக்
கருத்தைத் திருத்தி யாளக்
கர்த்தனே நித்யசிவ முத்தனே மெஞ்ஞான
காரணா வேத முதலா
மிருவரிய துரிய துரியாதீ தகண்டனே
யேகாந்த மோன வடிவே
யீசனே வன்னியா னந்தலிங் கேசனே
யிதுதருண மருள் புரிவையே (4

கல்லான விதயமது நில்லாது நல்வினை
கடந்துவரு பந்த பாசக்
கடலிடை படிந்துழலு மிடியதை யகற்றியே
கர கமல மீதெடுத்து
செல்லாது தொல்லையது புல்லாது நின்கிருபை
சேர்ந்திடுவ தெந்த நாளோ
செகலோக நாதனே பவநாச நீதனே
தேசிகா நற்றமிழை நேர்
கல்லாது கல்வியறி வல்லார்க ணட்பதைக்
கனவிலுங் கண்டு மறியேன்

கஞ்சமல ரஞ்சரண தஞ்சமென மாறாது
கண்டுனது சேவை காணு
மெல்லாரு நின்னடியர் தன்னடிமை போலவே
யேழையீடேறு தற்கு
யீசனே வன்னியா னந்தலிங் கேசனே
யீது தருண மருள்புரிவையே. (5

எந்தவித நற்குணமு மில்லாது சென்மித்த
வேளை யது சஞ்சலமதி
லெள்ளள விரக்கமு மில்லா திருப்பதுன்
னிதய மலரழ காகுமோ
சந்தமுறு திங்களுங் கங்கையுங் கொன்றையுஞ்
சடைதனி லணிந்த யோக
சங்கரா சதுர்வேத புங்கவா தமியனைக்
காத்திடத் தடைகளேதோ
அந்தநாளிற் கைலை சிந்தியல மோதிட
வசைத் திடுமை யிருசிரன்
ஆழ்ந்தியே பாதல மமிழ்ந்திடச் செய்தவா
ஆயனார் தன் மைத்துனு
எந்தநாளுந் தொண்டு கண்டினிது செய்திடு
மின்னடிய ருக்கு மருளு
மீசனே வன்னியா னந்தலிங் கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (6

கற்றவர்க ணற்றவர்க ளுற்றசபை நாடிக்
கலந்தவ ருறைக்கு முறையைக்
கண்டுதிட முற்றுநெறி தவராது செய்திடுங்
கருத்திலாப் பேதை யெற்கு
பெற்றவர்கள் பிள்ளையின் சஞ்சல மறிந்துமே
பேணியே காக்கு மதுபோல்
பிஞ்ஞகா காருண்ய நின்கிருபை மெஞ்ஞான
பேரின்ப மதனி னேடு
கொற்றமுத் தமிழினது வெற்றியுறு பெற்றியைக்
குவலய மெலா மகிழவே
கொடுமெனப் பணியது புரிந்திடு மேழையின்
குணமதனை யறி யொணுதா
எத்திசைக ளும்பரவு முத்தனே சுத்தனே
யேகாந்த பரி பூரண
யீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (7
மண்ணையுண்டும் பச்சை வெண்ணையுண்டு மாயர்
மாதர்களி னேய முற்ற
மாதவ முகுந்தனரி தேவகியின் மைந்ததிரு
வாரண மதற் கருள்செயுங்
கண்ணனது மருகனும் வண்ணமுறு கந்தனைக்
காத லுடனே பயின்ற
கரியுரி தரித்தவா பிறையது முடித்தவா

கங்கையைச் சடையில் வைத்த
அண்ணலே கறைமிடற் றண்ணலே யிந்திராதி
யமரர்முனி வோர்கள் போற்று
மையனே யன்பர்துதி மெய்யனே வேதாந்த
வருமறை துதிக்கு முதல்வா
எண்ணரிய செல்வமது நண்ணவரம் நல்குவா
யேழையா னுய்யும் வண்ண
மீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (8

சீராரு மாழித் துரும்பினது போலவே
சித்தம தலைந் தலைந்து
தேகமது மெலிவுற்ற சஞ்சல மகற்றியே
செஞ் சரண பாதகமலந்
தாராரு தண்மலரெடுத் திதய மன்பினொடு
சாத்தித் துதிப்ப தற்கு
சகலகலை மறைநிபுண வரதகுண நீதனே
சற்குண மதைத் தருகவே
பாரார் புகழ்ந்திடும் பண்ணவா மனோகரா
பாக்கிய சிலாக்ய யோகா
பத்தர்மிக நத்தியதி புத்தியொடு வாழ்த்திப்
பணிந்திடும் பரம நீதா
ஏராரும் நின்புகழை மாறாது சிந்திக்கு
மேழை யேனீ டேறவே

யீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (9

செகமது புகழ்ந்திடுங் கமலமல ரஞ்சரண
திகழ்பாத தஞ்ச மெனவே
தினமலரெடுத்து மிகு மனமுருகி யர்ச்சித்து
சேவையது செய்யு மடியா
ரகமருவி யொளிர்கின்ற வற்புத குணகரா
வைந்துகர வெண் மருப்பா
மத்திமுகனைப் பெற்ற நித்யகல் யாணனே
யருமறை துதிக்கும் வடிவே
தகமையுறு நின்கருணை யசரசர மெங்கணுந்
தானாய் நிறைந்த பரமே
சதுர்வேத மும்புகழு மதிசோதி நின்பெருமை
தமியனாற் சொல்ல வெளிதோ
இகமதனி லின்ன லுறு சஞ்சல மடைந்திடா
தெளியனைக் கிருபை யுடனே
யீசனே வன்னியா னந்த லிங்கேசனே
யிதுதருண மருள் புரிவையே. (10

புண்ணிய மகவும் பொருவரு நிதியும்
புகழொடு கல்வியும் ஞானம்
நண்ணியே வீட்டி னலமது புரியும்
நாடியே தினந் துதிப்போர்க்கு

எண்ணுதற் கரிய வன்னி லிங்கேச
ரிசையுறு நற் றிருப்பதிகங்
கண்ணிய மாகக் கருத்தினில் கொள்வோர்
கவலை தீர்ந் தருள்பெறுவாரே. சுபம்!




